# ஆனந்தபோதினி-

# பாவ ஸ்புட கணனம்

சென்னை :
"ஆனந்தபோதினி" பத்திராதிபர்
நா. முனிசாமி முதலியார்
அவர்களால் வெளியிடப்பட்டது.

[illegible]

# ஆனந்தபோதினி

# பாவ ஸ்புட கணனம்

K. S. Mahadevan
Madras.



சென்னை :
"ஆனந்தபோதினி" பத்திராதிபர்
நா. முனிசாமி முதலியார்
அவர்களால் வெளியிடப்பட்டது

1942



பலவும்
ன்று மாறு
ரணமாகவே

Ks Mahadevan.

# பதிப்புரை.

---

ஜ்யோதிஷ பல பாக விதிகளின்படி ஜாதகங்கள்—பிரஸ்னங்கள்—முகூர்த்தங்கள் ஆகிய இவற்றின் பல நிர்ணயம் பாவதண்டலியின் மூலமே தான் செய்ய வேண்டுவதாகும். பாவ தண்டலீ அல்லது பாவச்சக்கரம் உதய லக்ன ஸ்புடத்தின் துல்லிபத்தைப் பொறுத்திருக்கின்றது. இதைக் கணிக்கும் முறைகள் வழக்கிற் பல வுள்ளன. அவற்றுள் வானநூல் தத்துவங்களில் வருகின்ற நக்ஷத்திர ஹோரா மணி என்னும் ஒரு வகைக் காலக் கணக்கின்படி கணித்துக் கொள்வது ஒன்று. இதன்மூலம் உதய லக்ன ஸ்புடத்தை மிகவும் சரியாய்க் கணித்துக்கொள்ளலாம். இந்த முறை இன்றைய விஞ்ஞான அறிவும் ஏற்கத் தக்க ஒரு விளக்கமாகும். இத்தகைய ஒரு அரிய முறை எல்லோருக்கும் பயன் படுமாறு இந்தப் புத்தகத்தை நமது ஜ்யோதிஷ கலா ரஸிகர்களுடைய விருப்பத்திற் கிணங்க வெளி யிடலானோம்.

மேனாட்டிலும் கீழ் நாட்டிலும் பாவ ஸ்புட கணன முறைகள் பலவகையாக இருப்பதை அறிஞர்கள் அறிவார்கள். அவற்றுள் பலவும் அடிப்படையிலேயே ஒன்றுக்கொன்று மாறுபட்டுக் காணப்படுகின்றன. இது காரணமாகவே

பல பாவ நிர்ணயங்களுக்கு அவை பெரும்பாலும் சரியாகப் பயன் படத்தக்க விதமாக இல்லை. இவ் வுண்மையை, ஜ்யோதிஷ கலைத் துறையில் ஈடுபட்டுள்ள நிபுணர்கள் வெகுவாக உணர்கின் றனர். எனவே, ஜ்யோதிஷ சாஸ்திர ஆராய்ச் சியில் உள்ள இக் குறைபாட்டை ஒருவாறு போக்க வேண்டியது நம் கடமை என்று சிறிது காலமாகவே சிந்தித்து வரலானோம். அதன் பய னாகவே, இந்தப் பாவ ஸ்புட கணனம் உருக் கொண்டு வெளிவந்திருக்கிறது. இந் நூலில் பல பாவ நிர்ணயங்களுக்குச் சரியான பாவ ஸ்புட கணனத்தை ஜ்யோதிஷ சாஸ்திரத்தில் சாதாரண ஞானமுள்ளவர்கள் கூட எளிதாகச் செய்து கொள்வதற்கு உதவியாக இருக்கும் எல்லாவற்றை யும்—போதிய விளக்கங்களுடன் முக்கியமாகத் தரப்பட்டிருக்கிறது. ஆகவே, இந் நூல், ஜ்யோ திஷப் பிரக்ஞை யுடையவர்கள் அனைவருக்கும் மிகவும் பயன்படக் கூடியதாக இருக்கும் எனத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

சென்னை. }
22—7—42. }

பதிப்பாளர்.

# பொருளடக்கம்.

## (முதற் பாகம்)

ஓம்:

# ஜாதக லக்ன ஸ்புட-
# பாவ ஸ்புட கணனம்.

## (முதற் பாகம்)

### 1. முன்னணிக் குறிப்புக்கள்

#### ஜ்யோதிஷ பலன்கள்

ஜ்யோதிஷ சாஸ்திரம் விரிக்கும் பலன்கள் (Treaties on Predictive side of Astrology) அனைத்தும் ஜாதகங்கள்—பிரஸ்னங்கள் ஆகிய இவற்றின் பல நிர்ணயத்திற்கு முக்கியம் வாய்ந்தன. ஜாதகங்களிலோ — அன்றி பிரஸ்னங்களிலோ காணும் உதயம் (Ascendant) முதலாக வுள்ள பன்னிரு பாவங்களிலும் இடம் பெறும் (Location of Planets) நிலைகளைக் கொண்டு தான் அந்தப் பலன்கள் சொல்லப் பெறுகின்றன வென்பது குறிப்பிற் கொள்ளத் தக்கதாகும். எனவே, பன்னிரு பாவங்களையும் கண்டு கொள்வதற்குரிய கணித முறை இங்கே சொல்லப் பெறுகின்றது.

பாவங்களைக் காட்டும் குண்டலி அல்லது சக்கரம் பாவ குண்டலி அல்லது பாவச் சக்கரம் என்று சொல்லப் பெறும். பாவங்களை (Bhavas) க் காணுமலே, இராசி குண்டலியின் பன்னிரு ராசிகளையும் வைத்து அவற்றில் இடம் பெறும் கோள்களுக்குப் பலன் சொல்லுவது அவ்வள்வு துல்யமாக (சரியாக) வருவதில்லை. பல பாகம் எந்த வழியில் கூற முற்பட்டதோ அந்த வழியில் பலன் பார்ப்பது தான் சரியாக விருக்கும். அது பாவங்களில் இடம் பெறும் கோள்களின் நிலைகளைக் கொண்டு தான் பலன்களை விவரிக்கின்றது.

இராசி குண்டலியில் ஒரு இராசியின் அளவை தோராயமாக பாகை முப்பது என்று கொள்வது போல, பாவ குண்டலியில் ஒவ்வொரு பாவத்தையும் கொள்ளக் கூடிய தில்லே. பாவஸ்புட ரீதியாக பாவங்களிற் சில பாகை முப்பதிற்குக் கூடியும்—சில குறைந்தும் இருக்கும். வடக்கில் அல்லது தெற்கில் உள்ள பாவங்கள் போகப் போக அந்த முப்பது பாகைகளுக்குக் கூடியும்—குறைந்தும் ஏற்படுகின்றன. எனவே, பாவங்களின் எல்லைகளைக் காணுவது முதலில் முக்கியமானதாகும். பின்பு, இவ்விதம் கண்ட பாவங்களில் இடம் பெறும் கோள்களின் நிலையையும்—அவற்றின் ஆதிபத்தியங்களையும் தெளிவாகத் தெரிந்து கொண்டால் தான் ஜ்யோதிஷ பல பாக விதிகளின்படி பல நிர்ணயஞ் செய்வது சரியாக விருப்பதற்குச் சாத்தியமாகும்.

உதாரணமாக, ராசி குண்டலியில் ஒரே ராசியில் இடம் பெறும் கோள்கள் பாவ குண்டலியில் வேறு—வேறு பாவங்களில் இடம் பெறுவனவாய்—அல்லது ஆதிபத்தியங்களுக் குரியனவாய் வரலாம். ஜ்யோதிஷ பாரங்கதரான வராஹமிஹிரர் தம்முடைய பிருஹத் ஜாதகத்தில் பனிரெண்டாவது அத்தியாயத்தில்—ஆருவது சுலோகத்தில் ‘ புத-சுக்ரர்கள் சூரியனுக்குக் கேந்திரத்தே இருக்க’ இன்ன இன்ன பலன்கள் என்று கூறுகின்றுர். சாதாரணமாக ராசி குண்டலியில் இவர்கள் சூரியனுக்கு கேந்திரமாக ஒரே ராசியில் இருப்பது போல தோன்றும். ஆனல், பாவ ஸ்புட ரீதியாகக் காணும் போது அநேகமாக அவை கேந்திர ஸ்திதியினின்றும் முன்னே-பின்னே—அதாவது சூரியனுக்கு முன்னே இரண்டா மிடத்திலாவது அல்லது பின்னே] பனிரெண்டாம் இடத்திலாவது தான் இருக்கும். சில பொழுது அபூர்வமாகவே ராசி நிலையின் படி ஸ்திதி சரியாக விருந்து விடலாம். ஆயினும், கேந்திர ஸ்திதியின் பலத்திற்கு (Strength) அதாவது புஷ்டிக்கு பாவ ஸ்புடம் மிகவும் இன்றி யமையாத தாகும். எனவே, லக்னம் முதல் பன்னிரு பாவங்களையும் துல்யமாகவும்—சுலபமாகவும் கணித்துக் கொள்வதற்கு வான நூல் தத்துவங்களின்படி வரும் ஒரு வகையான காலக் கணக்கும்—அதன் சம்பந்தமாக ஏற்பட்டுள்ள விதிகளும் முதலில் அறிவோம்.

## வான நூல் தத்துவங்கள்

லக்னம் முதலான பன்னிரு பாவங்களையும் கொண்டது 'பாவ குண்டலி' யாகும். இது 'பவன சக்கர'த்தே (Ecliptic) இடம் பெறுகின்றது. 'பவன சக்கரம்' என்றால் அருக்கன் (சூரியன்) வீதி அல்லது அயன விருத்தம் என்பதாகும். வானம் (Heavens) பரந்த—எல்லையற்ற ஒரு பெருவெளி. அது பூமியைச் சுற்றிய கோள வடிவான கவசம்போன்று (Spherical Shell or Celestial Sphere) தோற்றுகின்றது. அவ்விதம் மண்டலாகார மான வட்டவடிவில் தோற்றுகின்ற அந்த வானத்தின் நடு—வெறும் காலியான கோளத்தின் நடு நமது பூமி இடம் பெறுகின்றது. பூமியைச் சுற்றிய அதனை பிரமாண்ட கோளம் (Celestial Sphere) என்னும்படி அது தன்னகத்து எண்ணற்ற பல கோடி அண்டங்களுக்கும்—பேரண்டங்களுக்கும் இடம் தந்து அடக்கியுள்ளது. அவற்று இந்த நிலவுலகும் ஒன்று. இதற்குப் பலன் நிகழ்த்தும் கோள்களும் (Planets) உடுக் கணங்களும் (Stars)—பிறவும் அந்த பிரமாண்ட வானில் தான் இடம் பெற்று, நமக்குத் திவ்யமான காட்சியைத் தருகின்றன. வானத்துக் காட்சிக்குரிய எண்ணிற் பல அண்டங்களுள்ளும், பூமிக்கு ஒளியும்—வெப்பமும் தருகின்ற இயற்றழல் உருவாய் ஒளிரும் பரிதி-சூரியனும் ஒன்று. அது வானத்தே நக்ஷத்திரங்கள் இடம் பெறும் வழியாகச் செல்வதைப்போல இருக்கின்றதல்லவா? இவ்விதம் சூரியன் செல்வதைப் போன்று தோற்றும் வீதியே அருக்கன் வீதி என்னும் அயன வட்ட (Ecliptic) மாகும்.

பூமி பெரும்பாலும் ஒரு பந்தைப் போன்று ஒரு உருண்டை வடிவான கோள மென்றும், அது தன் இருசின் (Axis) உதவியால் தன்னைத் தானே சுற்றிச் சுழன்று கொண்டிருக்கின்ற தென்றும் அறிந்திருக்கின்றோம். இந்த இருசின் இரு முனைகளையும் முன் சொல்லிய பிரமாண்ட கோளத்தை (Celestial Sphere) தொடும்படி நீட்டினால், அவை பிரமாண்ட கோளத்தில் சந்திக்கும் இடங்களுக்கு **பிரமாண்ட துருவங்கள்** (Celestial Poles) என்று பெயர். அவற்றுள் வடக்கி லுள்ளது **பிரமாண்ட வட துருவம்** என்றும், தெற்கி லுள்ளது **பிரமாண்ட தென் துருவம்** என்றும் சொல்வர். இவ்விதம் பிரமாண்ட

கோளத்தின் இடையே அமைகின்ற இருசு பிரமாண்ட இருசு ஆகும். இதன் நடு நேர் கோணமாகச் செல்லும் பிரமாண்ட வட்டம் பிரமாண்ட நிரக்ஷ ரேகை அல்லது புவன மத்திய ரேகை (Celestial Equator) எனப் பெறும். பூகோள சாஸ்திரங்களில் வரும் நிரக்ஷ ரேகை (Terrestrial or Geographical Equator) சாதாரண நிரக்ஷ ரேகை அல்லது பூமத்திய ரேகை என்று பெயர் வழங்குவர். இதனை — இந்தச் சாதாரண நிரக்ஷ ரேகையை பிரமாண்ட கோளத்தினுள் படும்படி மேலும்—கீழும் நீட்டினுல், பிரமாண்ட கோளத்தின் உள்பாகத்து ஏற் படத்தக்க பிரமாண்ட வட்டத்திற்கே பிரமாண்ட நிரக்ஷ ரேகை என்று கூறுவர். அருக்கன் வீதி அல்லது அயன விருத் தம் என்னும் பவனச் சக்கரத்தில் இரண்டு இடங்களில் புவன மத்திய ரேகை சந்திக்கின்றது. இந்த இடங்கள் இரண்டும் நேர்—எதிர் கோடிகளில் (Opposite Extrimities) தான் வாய்க் கத் தகுந்தன வென்பது குறிப்பிட வேண்டுவதில்லை. இந்த இடங்களில் ஒன்றுக்கு **மேஷாயனம்** என்றும், மற்றொன்றிற்கு **துலாயனம்** என்றும் பெயர் தந்திருக்கின்றனர். புவன மத்திய ரேகையின் தெற்கி லிருந்து அதற்கு வடக்காகச் செல்லும் பொழுது எந்த இடத்தின் வழி செல்கின்றதோ அந்த இடத் திற்குத் தான் மேஷாயன மென்றும், மற்றொரு (அதன் நேர் எதிர் கோடியி லுள்ளது) இடத்திற்கு துலாயனமென்றும் கொள்வர். பூமிக்குரிய தன்னைத் தான் சுற்றிக் கொள்ளும் சுழற்சியினுல், இதர அண்டங்களைப் போலவே மேஷாயன மும் கிழக்கிருந்து மேற்காகச் சுற்றிக் கொண்டிருப்பதாகத் தோற்றுகின்றது.

பிரமாண்ட வட துருவம்—நமது உச்சி (Zenith—உன்ன தம்), பிரமாண்ட தென் துருவம்—அடி பாதலம் (Nadir—நதம்) இவற்றின் வழி செல்லும் பிரமாண்ட வட்டத்திற்கு பிரமாண்ட உச்சரேகை (Meridian) என்பர். முன்னம் கூறியவாறு சுற்றிக் கொண்டிருக்கும் மேஷாயனம் இந்த பிரமாண்ட உச்சிக்கு அடிக்கடி வந்து கொண்டே யிருக்கின்றது.

### நக்ஷத்திர ஹோரா தினம்

இவ்விதம் மேஷாயனம் அதன் இயலான சுழற்சியின் கதியில், பூமியில் ஒரு இடத்திலிருந்து பார்க்கும் பொழுது

அது வானத்தில் நமது தலைக்கு மேலே பிரமாண்ட உச்சி ரேகைக்கு ஒரு தடவை வந்தது முதல் அடுத்த தடவை வரும் வரையுள்ள காலம் தான் நக்ஷத்திர ஹோரா தினம் என்பதாம். இது நமது சாதாரண கடியாரக் கணக்கின்படி 23 மணி 56 நிமிஷம் 04·09 செக்கண்டு ஆகும். இந்த நக்ஷத்திர ஹோரா தினம் தான் பூமி தன்னைத் தான் ஒருதரம் சுற்றி வருவதற்கு ஆகின்ற காலமாம். இந்த நக்ஷத்திர ஹோரா தினத்தின் காலத்தை இருபத்தி நான்கு சம பாகங்களாக்க வருகின்ற பாகம் ஒவ்வொன்றும் நக்ஷத்திர ஹோரா மணி யாகும், இந்த நக்ஷத்திர ஹோரா மணி ஒன்றை அறுபது பங்கிடக் கிடைக்கும் ஒவ்வொரு பாகமும் நக்ஷத்திர ஹோரா நிமிஷம் ஆகும், இந்த நக்ஷத்திர ஹோரா நிமிஷம் ஒன்றை அறுபது கூறிட வரும் ஒவ்வொரு கூறும் நக்ஷத்திர ஹோரா செக்கன்டு ஆகும்.

மேஷாயன சம்பந்தமான தினம்-மணி–நிமிஷம்–செக் கன்டு இவற்றிற்கு முறையே நக்ஷத்திர ஹோரா தினம்—நக்ஷத்திர ஹோரா மணி—நக்ஷத்திர ஹோரா நிமிஷம்—நக்ஷத்திர ஹோரா செக்கன்டு என்று சொல்லப் பெறும். இந்த நக்ஷத்திர ஹோரா மணி—நக்ஷத்திர ஹோரா நிமிஷம் ஆகியன வற்றைக் காட்டும் தனியான ஒரு கடியாரம் வான நூற் பயன் களுக்காக வேண்டி எல்லா நக்ஷத்திர கூடங்களிலும் (Observatory) உண்டு, அதற்கு நக்ஷத்திர கடியாரம் (Siderial Clock) என்பார்கள். இது உலக வழக்கில் பயன்படுத்தப் பெறுவ தில்லை. உலக வழக்கிற் குரிய கடியாரம் மீன் ஸன் கடியாரம் (Mean Sun Clock)—அல்லது சாதாரண கடியாரம் என்று சொல்லப் பெறும். இங்கு கூறப் பெறும் கடியாரம் பின்னுள் ளதேயாகும். ஆனால், உலக வழக்கிலுள்ள கடியார காலத்தை க. கா. என்றும், நக்ஷத்திர ஹோராதி காலத்தை ந. கா. என் றும் இந்த நூல் முழுவதும் குறிப்பிட்டு வருவோம்.

முன் கூறி யிருப்பது போல நக்ஷத்திர ஹோராதி காலத் திற்கும்—மேஷாயனத்திற்கும் உள்ள சம்பந்தம் ஏற்படுகின் றது. அதாவது மேஷாயனம் இடம் பெறுவது பவனச் சக்க ரத்தின்கண் என்பதனால், அதற்கும்—நக்ஷத்திர ஹோராதி காலத்திற்கும் அவ்விதமாக ஒருவகை சம்பந்தம் உண்டு எனத்

தெரிகின்றது. லக்னம்—பனிரெண்டு ராசிகள்—பனிரெண்டு பாவங்கள் ஆகிய இவையும் பவன சக்கரத்தில் தான் இருத்த லின், இவற்றிற்கும்—நக்ஷத்திர ஹோராதி காலத்திற்கும் சம்பந்தம் இருக்கின்றது. எனவே, குறிப்பிட்ட ஒரு காலத் திற்கு நக்ஷத்திர ஹோரா காலம் தெரிந்தால் மட்டுமே அந்தக் காலத்திற்கு அதை அனுசரித்து வரும் (9-வது வாக்கியம் போன்ற) தனித் தனி வாக்கியங்களின் உதவியால், லக்ன ஸ்புடமும்—பாவ குண்டலியும் சரியாகக் காணக் கூடும்.

## உதய லக்ன ஸ்புடம்

உதய லக்ன ஸ்புட கணிதம் பொதுவான இராசிமான அளவைக் கொண்டு (மேஷம் 4½-நாழிகை, விருஷபம் 4¾-நாழிகை, மிதுனம் 5¼-நாழிகை, கடகம் 5½-நாழிகை, கும்பம் 4¾-நாழிகை, மீனம் 4¼-நாழிகை என்பது போன்றன.) எல்லா இடங்களுக்கும் கணிப்பது தோராயமானது. அவ்வகையில், அதன் துல்யமும் உத்தரவாத முடையதாக விருக்க முடியாது. பெரும்பாலும் அந்தக் கணிதத்தில் லக்னஸ்புடம் பிசகாகவே இருக்கும். அதனுல், ஒவ்வொரு இடத்திற்கும் அந்தந்த அக்ஷாம் சங்களுக்கு ஏற்ப தந்திருக்கும்—அல்லது கணித்துக் கொள் கின்ற இராசிமான சங்கியைக் கொண்டு லக்ன ஸ்புடம் கணித் துக்கொண்டால் போதுமானதாவென்று பார்ப்போம், அதிலும் 'லக்ன சந்தி' என்ற சந்தேகப் பிரச்னை உண்டாகும் பொழுது, அந்த சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்வதற்கு ஏதுவில்லை, எனவே, இதுவும் அவ்வளவு சரியானதல்ல வென்றே கூறலாம். இறுதியாக, நக்ஷத்திர ஹோராதி காலத்தை அனுசரித்துக் கணிக்கும் முறை முன் கூறியவற்றைக் காட்டிலும் அதிகம் துல்யங் கொண்டதாய், 'லக்ன சந்தி' போன்ற சகலவிதமான சந்தேகங்களையும் நிவர்த்தி செய்து நிச்சயிக்கக் கூடுமானதாக நிபுணர்கள் கண்டு வைத்திருக்கின்றனர். இது லக்ன ஸ்புடம். பாவ குண்டலி இவற்றை மிகவும் சரியாகக் கணிப்பதற்கு உதவியாக விருக்கின்றது. ஆதலின், நக்ஷத்திர ஹோராதி கால முறையைக் கணிதங்களுக்கு அனுசரித்துக் கொள்வது இன்றி யமையாத தாகும்.

## கால அளவுகள்

கால அளவுகள் என்ற டயம் இந்தக் காலம் பலவகைத்து (Several kinds of time) உள்ளன. அவை பிரத்தியக்ஷமானம் (Apparent Time) – சௌரமானம் (Mean Solar Time) – திட்டமானம் (Standard Time) ஆகியனவாம்.

இதில் முதலாவதாக வருவது பிரத்யக்ஷமானம் (Apparent Time) என்பதாம். பிரத்யக்ஷம் என்றால், வெளி முகத்துக் காட்சிக்குத் தோற்றுவது என்று அர்த்தம். தோற்றங்களில் தலையாவது மிகப் பெரியது ஒளி முதற்பொருளாக விலங்கும் சூர்யன் ஆகும். அது – அந்தச் சூரியன், பூமியில் ஒரு இடத்திலிருந்து பார்க்கும்பொழுது ஒரு தடவை ஆகாயவெளியில்-அதாவது பிரமாண்ட வானில் நமது தலைக்குமேல் பிரமாண்ட உச்சி ரேகைக்கு வந்தது முதல் அடுத்தமுறை அந்த இடத்திற்கு வருவது மட்டுமுள்ள காலம் பிரத்யக்ஷ தினம் (Apparent Solar Day) எனப் பெறுவதாம். இந்த தினத்தின் பொழுதை (Duration) இருபத்தி நான்கு சம பங்கிட, வருகின்ற ஒவ்வொரு பாகமும் பிரத்யக்ஷமான காலம் அல்லது மணி ஆகும். இதில் மேலே கண்ட சூர்யனுடைய கதி காட்சிக் குரியதாக விருந்தமை தோற்றம் மாத்திரைதான். ஆனால், நிஜமான சூர்யனது கதி ஒரே மாதிரியாக (Uniform Motion) இருக்கவில்லை. இந்த நிலையில் இதனை ஆதாரமாக்கி கடியாரங்கள் அமைத்துக் கொண்டு பயன்படுத்துவதில் உலகவழக்கிற்குக் கஷ்டமாக விருக்கும். அதனால், அது உபயோகத்திற்கு எடுத்துக்கொள்ளப் படவேயில்லை யாதலால், அது நம்முடைய கவனத்திற்குமுரியதில்லை.

எனவே, எப்பொழுதும் ஒரேவிதமாக ஒரு குறித்த கதியில் செல்லும் ஒரு சூரியனை கணித வழக்கிற்கு நம்முடைய மனக்கண்முன் இருப்பதாகக் கொள்வோம். இத்தகைய ஒரு சூர்யன் கற்பித சூர்யன் (Fictitious Mean Sun) என்னலாம். பூமியில் ஒரு இடத்திலிருந்து பார்க்கும்பொழுது இந்த கற்பித சூர்யன் ஒரு தடவை வானத்தே நமது தலைக்கு நேரே பிரமாண்ட உச்சி ரேகைக்கு வந்தது முதல் அடுத்த முறை வருகின்ற பொழுது வரையுள்ள காலத்திற்கு சௌரமான தினம் (Mean Solar Day) என்று பெயர். இந்த தினத்தின் பொழுதை இருபத்தி நான்கு

சம பங்கிட வருகின்ற பாக மொவ்வொன்றும் சௌரமான காலம் (Mean Solar Time) அல்லது மீன காலம் (Mean Time) எனவரும். இது அந்த இடத்திற்குரிய மீனகாலம்—அதாவது சுதேச மீனகாலம்—(Local Mean Time) எனப் பெறும். இதுவே சுதேச கடியார மணி-அல்லது சுதேச மணி (Local Time) என்பது மாகும்.

பரந்த இப் பூமியில் நிலப்பரப் பெங்கும் இடங்கள் பலவுள்ளன; அவ்வவற்றிற்குரிய சுதேச கடியார மணி உண்டு. இவ்விதம் ஒவ்வொரு இடத்திற்கும் ஒவ்வொரு சுதேசமணி வைத்துக்கொள்வதில், உலக வழக்கில் கார்ய நிர்வாகம் மிகவும் கஷ்டமாக விருக்கும். அதற்காக வானநூற் கணிதத்திற்குக் குறிப்பாக ஒரு இடத்தை வைத்துக்கொள்வது அவசியமென்று கருதி, முன்னம் நம்முடைய இந்திய தேசத்தில் உஜ்ஜினி முதலிய இடங்களை வைத்திருந்தனர். தற்காலத்தில் 'க்ரீன்விச்' (Greenwich) என்னும் நகருக்குரிய சுதேசமணியையே (Greenwich Mean Time) பெரும்பாலும் உலக முழுவதும் உபயோகப் படுத்தி வருகின்றனர். ஆயினும், உலக வழக்குகளில் காரியங்களை நடத்திக்கொள்வதற்கு ஒவ்வொரு தேசத்திற்கும்-அல்லது ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒவ்வொரு சுதேசமணியை அந்தந்த அரசாங்கங்களின் மூலம் ஏற்படுத்திக்கொண்டு, அந்தந்த தேசங்களில் அல்லது மாகாணங்களில் முழுவதும் உபயோகப்படுத்தி வருகின்றார்கள். 1906-ம் வருஷம் ஜுலைமாதம் 1-ந்தேதி பகல் பனிரெண்டு மணிக்கு முன்னர் நமது சென்னை மாகாணத்தில் எல்லா பெரிய நகர்களிலும், ரயில்வே முதலிய நிலையங்களிலும் (Railway Stations) சென்னை நகருக்குரிய சென்னை சுதேச காலமணியை உபயோகப்படுத்தி வந்தனர். இந்த சென்னை சுதேச மணிக்கும்-கிரீன்விச் நகரின் சுதேசமணிக்கும் 5-மணி 20-நிமிஷம் 59-செக்கன்டு அல்லது 5-மணி 21-நிமிஷம் வித்தியாசம் உண்டு; அதாவது கிரீன்விச் சுதேச மணிக்கு சென்னை சுதேச மணி 5-மணி 21-நிமிஷம் அதிகமாக விருக்கிற தென்பதாகும். கிரீன்விச் சுதேச மணிக்கும்—ஒரு தேசம் அல்லது மாகாணத்திற்குரிய சுதேச மணிக்கும் உள்ள வித்தியாசம் அந்த தேசம் அல்லது மாகாணத்து சுதேச மணி வித்தியாசமாகும். அனுபந்தம் நெ. 1ஐப் பார்க்கவும். 1-7-1906-பகல்

12-மணிக்குப் பின்பு இதுவரைக்கும் இந்தியாவில் கல்கத்தா, போர்ச்சுகீஸ் இந்தியா இவைதவிர இதர இடங்களிலும்-இலங்கைத்தீவில் (Ceylon) எல்லா இடங்களிலும் இந்தியா ஸ்டாண்டர்ட் மணி அல்லது மதராஸ் ஸ்டாண்டர்ட் மணி உபயோகத்தில் இருந்து வருகிறது. இது கிரீன்விச் சுதேச மணியை விட 5-மணி 30-நிமிஷம் அதிகமானது. 1-7-1906 பகல் 12-மணிக்குப் பிறகு கல்கத்தாவிலும்—போர்ச்சுகீஸ் இந்தியாவிலும் சுதேசமணி அல்லது இந்தியா ஸ்டாண்டர்ட் மணியோ அன்றி இரண்டுமோ உபயோகப்படுத்தி வருகின்றனர்.

எனவே, லக்ன ஸ்புட கணிதத்திற்குக் கிடைக்கும் நேரம் எதுவென அறிதல் வேண்டும். ஸ்டாண்டர்ட் மணிக்கும் கிரீன்விச் மணிக்குமுள்ள வித்தியாசம் ஸ்டாண்டர்ட் மணி வித்தியாசம் ஆகும். இந்த ஸ்டாண்டர்ட் மணி அடிக்கடி அந்தந்த தேசம் அல்லது மாகாணங்களின் சௌகரியங்களுக்கேற்ப மாற்றப்பட்டு வருவதால், அதற்கும்—கிரீன்விச் மணிக்கும் உண்டாகத்தக்க அவ்வப் பொழுதைய வித்தியாஸம் என்னவென்று எவ்விதமும் தெரிந்து கொள்வது முக்கியமாகும். இந்த விவரம் சில முக்கியமான தேசங்களுக்கும்-நகர்களுக்கும் இதுவரை யுள்ளவாறு 6-வது வாக்கியத்தில், கடியார மணி வித்தியாசம் என்னும் தலைப்புள்ள பத்தியில் (Column) கொடுத்திருக்கிறது. ஆகையால், எதிர்காலம் அவ்வப்போதுள்ள மாறுதல்களைத் தெரிந்து கொள்ளவேண்டும். சுதேச மணியை சு. ம. என்றும், ஸ்டாண்டர்ட் மணியை ஸ். ம. என்றும் குறிப்பிடுவோம்.

குறிப்பு:—சில இடங்களில் தபால் ஆபிஸ்களிலும் இந்த சென்னை சுதேச கால மணி உபயோகத்தில் இருக்கின்றது. 1-7-1906-க்கு முன்னர், லக்ன கணிதத்திற்கு வரும் நேரம் சென்னை சுதேச மணியா—அல்லது சுதேச கடியாரமணியா என்று தெரிந்து கொள்ள முடியாத நிலையில், ரயில்வே ஸ்டேஷன் உள்ள ஊர்களிலும் அல்லது அருகிலுள்ள ஊர்களிலும் சென்னை சுதேசமணி உபயோகப்படுத்தி யிருக்குமென்றும், ரயில்வே ஸ்டேஷன்களுக்கு தூரத்திலுள்ள கிராமங்களில் சுதேச கடியார மணி உபயோகப்படுத்தியிருக்கு மென்றும் அறியவேண்டும்.

### சகல தேசங்களுக்கும் உபயோகப்படுத்த வேண்டிய பொதுவிதி

லக்ன ஸ்புடம் கணிப்பதற்கு ஒருவர் பிறந்த இடமும்—வேளையும் அவசியமான அம்சங்களாகும். அந்த இடத்திற்கு பி. இ. என்ற குறிப்பெழுத்துக்களால் வழங்குவோம். பிறகு அந்த இடத்தின் கடியாரத்தில் மேற்குறித்த வேளையில் சுதேச மணி உபயோகித்திருந்தால், அது எந்த நகரின் சுதேசமணியோ அந்த நகரை மா. என்னும் குறிப்பெழுத்தினுல் குறிப்பிடுவோம். உதாரணமாக, 1-7-1906 பகல் 12-மணிக்கு முன்னே நமது சென்னை மாகாணத்தில் எல்லா இடங்களிலும்—அதாவது சென்னை-தஞ்சாவூர்-மதுரை முதலிய எல்லா ஜில்லாக்களிலும் கடியாரத்தில் சென்னை சுதேசமணியை உபயோகப்படுத்தி வந்திருக்கிறார்கள். எனவே, இங்கு 'மா' என்பது சென்னை மாகாணத்தைக் குறிக்கும். பி என்ற இடத்தில் கடியாரத்தில் மேற்குறித்த வேளையில் ஸ்டாண்டர்ட் மணி உபயோகப்படுத்தியிருந்தால், அந்தமணி எந்தத் தலத்தின் சுதேச கடியார மணியோ அந்த இடத்தை ஸ். என்ற எழுத்தால் குறிப்பிடுவோம். எந்த இடத்திற்கு இந்த நூலின் பத்தாவது வாக்கியத்தில் அல்லது பஞ்சாங்கங்களில் நக்ஷத்திர ஹோராதிமணி குறிப்பிடப்பட்டிருக்கிறதோ அந்த இடத்தை கி என்ற எழுத்தினுல் குறிப்பிடுவோம். இந்த நூலில் பத்தாவது வாக்கியத்தில் கிரீன்விச் நகருக்கு 1865-ம்ஸு முதல் 1942-ம்ஸு வரையும் நக்ஷத்திர ஹோரமணி கொடுத்திருப்பதால், இங்கு கி என்பது கிரின்விச் நகராகும். சில சமயங்களில் பி யும் ம வும் ஒரே இடமாக நேரலாம். இவ்விதமே பி. யும் ஸ். உம் இந்த இடங்களும் ஒன்றேயாக சம்பவிக்கலாம்.

## 2. வாக்கியங்கள்

(அவற்றின் விளக்கமும்—உபயோகப் படுத்தும் விதமும்)

முதலாவது வாக்கியம் :—(காலக் குறிப்புகள் — நண்பகல் தொடக்கம்) இதில் கடியார மணி பகல் 12 மணி முதல் லக்ன ஸ்புடம் கணிக்க வேண்டிய கடியார மணி வரையும் செல்லான கடியார காலத்தை க. கா. என்று குறித்திருக்கின்றது. க. கா. என்பன கடியார காலத்தைக் குறிக்கும் குறிப்பு எழுத்துக்கள். உதாரணமாக இரவு 9-மணி 47-நிமிஷம் 36-செக்கன்டிற்கு

லக்னம் கணிக்க வேண்டுமென்று வைத்துக்கொண்டால், பகல் 12-மணி முதல் இரவு 12-மணி வரையுமுள்ள காலத்திற்கு பி. எம். (P. M.) என்ற குறிப் பெழுத்துக்களாலும், இரவு 12-மணி முதல் பகல் 12-மணி வரையுள்ள காலத்தை ஏ. எம். (A. M.) என்னும் குறிப் பெழுத்துக்களாலும் குறிப்பிடுவது வழக்கு.

மேலே கூறிய இரவு 9-மணி 47-நிமிஷம் 36-செக்கன்டு என்பது 9-மணி 47-நிமிஷம் 36 செக்கன்டு பி. எம். (P. M.) ஆகும். முதலாவது வாக்கியத்தில் முதற் பத்தியில் (Column) 9. பி. எம் என்பதற்கு எதிரில் இரண்டாவது பத்தியில் எண் 9-போட்டிருக்கின்றது இந்த எண் 9 என்பது பகல் 12-மணி முதல் இரவு 9-மணி வரையுள்ள 9-மணி நேரம் கடியார காலம் செல்லானது என்பதைத் தெரிவிக்கும் இவ்விதமே முதற் பத்தியில் 9-ஏ. எம் என்பதற்கு எதிரில் இரண்டாவது பத்தியில் காணும் எண் 21-என்பது பகல் 12-மணியிலிருந்து காலை 9-மணி வரையும் 21-மணி நேரம் கடியார காலம் செல்லானது என்று தெரிவிக்கின்றது. இதே விதம் மேலே உதாரணமாக எடுத்துக்கொண்ட 9-மணி 47-நிமிஷம் 36-செக்கன்டும் பகல் 12-மணி முதல் இரவு 9-மணி 47-நிமிஷம் 36-செக்கன்டு வரையும் கடியார காலம் செல்லானது 9-மணி 47-நிமிஷம் 36 செக்கன்டு ஆயிற்று என்று அறிக. இந்தக் கடியார காலமாகிய க. கா. என்பதைத் தான் நான்காவது வாக்கியத்தின் தலைப்பில் கொடுத்திருக்கின்றது, கணிதத்திற்குக் கிடைக்கின்ற கிரின்விச் நக்ஷத்திர ஹோராதி மணி அல்லது வேறே எந்த நகரின் நக்ஷத்திர ஹோராதி மணி பகல்12-மணிக்குக் கொடுத்திருந்தால் மட்டுமே இந்த முதலாவது வாக்கியத்தை உபயோகப் படுத்தலாம். நக்ஷத்திர ஹோராதி மணி இரவு 12-மணிக்குக் கொடுத்திருப்பின், இரண்டாவது வாக்கியத்தை உபயோகப் படுத்த வேண்டும்.

இரண்டாவது வாக்கியம் :—(காலக் குறிப்புக்கள் — நடு நிசித் தொடக்கம்) இதுவும் முதலாவது வாக்கியத்தைப் போன்றது தான். ஆனால். காலத் தொடக்கம் முன்னதைப் போல நண்பகலி லிருந்து இல்லாமல் நடுநிசி முதல் ஆரம்பஞ் செய்யப் படுகின்றது. அதாவது இதில் கடியார மணி இரவு

12-மணியி லிருந்து லக்ன ஸ்புடம் கணிக்க வேண்டிய கடியார மணி வரையும் என்று செல்லான மொத்த கடியார காலத்தை க. கா. என்று குறித்திருக்கிறது. முன்னம் மேலே கூறியது போல கணிதத்திற்குக் கிடைக்கக் கூடிய நக்ஷத்திர ஹோரா மணி இரவு 12-க்குக் கொடுத்திருந்தால் மட்டும் இந்த இரண்டாவது வாக்கியத்தை உபயோகப் படுத்தலாம்.

மூன்ருவது வாக்கியம் :—(ரேகாம்ச திருத்தம்) லக்ன ஸ்புட கணித்திற் குரிய ஒருவர் பிறந்த இடமாகிய பி என்னு மிடத்திற்கும்-நக்ஷத்திர ஹோராதி மணி தந்திருக்கும் கி என்னு மிடத்திற்கும் உள்ள நக்ஷத்திர ஹோரா கால வித்தியாஸம் இந்த மூன்ருவது வாக்கியத்தில் இடம் பெற்றிருக்கின்றது. இந்த வித்தியாஸம் ரேகாம்ச திருத்தம் எனப் பெறும். அதனை ரே-தி என்னும் குறிப் பெழுத்துக்களால் குறிப்பிடலாம்.

பி. என்ற இடம் கி. என்ற இடத்திற்குக் கிழக்கில் இருந்தால், ரே. தி. என்பது ருணக் குறி யுடையதாகவும், அது மேற்கில் இருந்தால் ரே. தி. தனக் குறி யுடையதாகவும் ஆகும். ருண மென்பது கழித்தற் குரிய தென்றும்—தன மென்பது கூட்டலுக் குரிய தென்றும் அர்த்தமாம்.

பி. என்னு மிடத்திற் குரிய ரேகாம்சம் கி. என்னு மிடத்திற் குரிய ரேகாம்சத்தைக் காட்டிலும் பெரிதாக விருப்பின், பி. என்னு மிடம் கி. என்னு மிடத்திற்குக் கிழக்கி லுள்ள தென்றும், அந்த ரேகாம்சம் சிறியதாக விருப்பின் அது மேற்கி லுள்ள தென்றும் அறிக. ஆனல், இது கிழக்கு ரேகாம்சமாக விருக்கும் பொழுது மட்டும் சரியாக விருக்கும்; மற்று, மேற்கு ரேகாம்சமாக விருக்கும் பொழுது இந்த முறையை எதிர் வசமாக (Reverse) மாற்றிக் காணவும்.

இனி, மூன்ருவது வாக்கியத்தைப் பயன்படுத்தும் முறையைச் சில சான்றுகளால் விளக்குவோம்.

1-வது உதாரணம் :—லக்ன ஸ்புட கணிதத்திற்குரிய இடமாகிய பி. என்பதை சென்னை என்றும், நக்ஷத்திர ஹோராதி மணிக் குரிய இடம் கி. என்பதை கிரின்விச் நகரம் என்றும் வைத்துக் கொள்வோம். இந்த இரண்டு தலங்களுக்கு முள்ள ரேகாம்ச திருத்தம் என்ன வென்று காணலாம். சென்னையின்

ரேகாம்சம் பாகை-80 கலை-14 விகலை-47 கிழக்கு ஆகும்; கிரீன் விச் நகரின் ரேகாம்சம் பாகை-0 கலை-00 விகலை-00 ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| | | பா. கலை. விகலை. | |
| பி. சென்னை நகரின் ரேகாம்சம் | = | 80—14—47 கி | (1) |
| கி, கிரீன்விச் ,, ,, | = | 0—00—00 | (2) |
| ரேகாம்ச வித்தியாசம் (1) லிருந்து (2) ஐக் கழிக்க | = | 80—14—47 | (3) |

| ரேகாம்ச வித்தியாசம், பா. கலை. விகலை. | | ரேகாம்ச திருத்தம். நக்ஷத்திர ஹோரரா கால செக்கன்டு. | |
|---|---|---|---|
| 80—00—00 க்கு ரே. தி. | = | 52· 57 | |
| 0—10— 00 ,, | = | 00· 110 | |
| 0—04—00 ,, | = | 00·044 | |
| 0—00—40 ,, | = | 00·007 | |
| 0—00—07 ,, | = | 00·001 | |
| கூட்ட 80·41—47க்கு ரே. தி. | = | 52·732 | (4) |

எனவே, ரே. தி. 52·732 நக்ஷத்திர ஹோராதி செக்கன்டு ஆகிறது. சென்னை கிழக்கு ரேகாம்சம் உடையதாய்-சென்னை நகரின் ரேகாம்சம் கிரீன்விச் நகரின் ரேகாம்சத்தைக் காட்டினும் பெரியதாய் இருத்தலின், ரே. தி. முன் கூறிய விதிப்படி ருணக்குறியுடையது. அதாவது ரேகாம்ச திருத்தம்—52·732 நக்ஷத்திர ஹோரரா செக்கன்டு ஆகும்.

2-வது உதாரணம்:—லக்ன ஸ்புடத்திற்குரிய பி. என்பதை டில்லி (Delhi) என்றும், நக்ஷத்திர ஹோரரா மணிக்குரிய இடமாகிய சி. என்பதை சென்னை என்றும் வைத்துக்கொள்வோம். இந்த இரண்டு இடத்திற்குமுள்ள ரேகாம்ச திருத்தம் கணக்கிடுவோம். சென்னை நகரின் ரேகாம்சம் பாகை 80 கலை 14 விகலை 47 கிழக்கு; டில்லி பட்டணத்தின் ரேகாம்சம் பாகை 77 கலை 28 விகலை 00;

| | | | |
|---|---|---|---|
| | | பா. கலை. விகலை. | |
| பி. டில்லியின் ரேகாம்சம் | = | 77—28—00கி | (1) |
| சி. சென்னை நகரின் ,, | = | 80—14—47கி | (2) |
| ரேகாம்ச வித்தியாசம் (2)லிருந்து (1) ஐக் கழிக்க | } | 2—46—47 | (3) |

| ரேகாம்ச வித்தியாசம். | | | ரேகாம்ச திருத்தம். |
|---|---|---|---|
| பா. கலை. விகலை | | | நக்ஷத்திர ஹோரா கால செக்கன்டு |
| 2—00—00க்கு | ரே. தி. | = | 01· 31 |
| 0—40—00 | „ | = | 00·440 |
| 0—06—00 | „ | = | 00·066 |
| 0—00—40 | „ | = | 00·007 |
| 0—00—07 | „ | = | 00·001 |
| கூட்ட 2—46—47க்கு | ரே. தி. | = | 01·824 (4) |

எனவே, ரே. தி. 01-824 நக்ஷத்திர ஹோரா செக்கன்டு ஆகும். டில்லியும் சென்னையும் கிழக்கு ரேகாம்ச முடையனவே; ஆனால், டில்லியின் ரேகாம்சம் சென்னையின் ரேகாம்சத்தை விட சிறியது. அதனால், இந்த ரேகாம்ச திருத்தம் தனக்குறி யுடையது; அதாவது, ரேகாம்ச திருத்தம் 01·824 நக்ஷத்திர ஹோரா செக்கன்டு ஆகும்.

நான்காவது வாக்கியம்;—(நக்ஷத்திர ஹோராதி காலமாக்க)

இதன் உதவியால் ஒரு குறித்த கடியார காலத்திற்குச் சமமான நக்ஷத்திர ஹோராதி காலத்தை அறிதல் கூடும். அதாவது ஒரு கடியார கால அளவை நக்ஷத்திர ஹோராதி கால அளவாக மாற்றிக் கொள்ளலாம். அடியிற்காணும் உதாரணத்தின்மூலம் இந்த நான்காவது வாக்கியத்தைப் பயன்படுத்தும் முறை புலனாகும்.

உதாரணம்:—9-மணி 47-நிமிஷம் 36-செக்கன்டு என்னும் கடியார கால அளவை நக்ஷத்திர ஹோராதி கால அளவாக மாற்ற:—

| கடியார காலம் க. கா. | | நக்ஷத்திராதி காலம் ந. கா. |
|---|---|---|
| மணி. நிமி. செக்கன்டு | | மணி. நிமி. செக்கன்டு. |
| 9 — 00 — 00 | | 9—01— 28·708 |
| 0 — 47 — 00 | = | 0—47— 07·721 |
| 0 — 00 — 36 | = | 0—00— 36·099 |
| கூட்ட 9 — 46 — 36க்கு | | 9—49— 12·528 |

எனவே, கடியார கால அளவாகிய மணி 9-நிமிஷம் 47-செக்கன்டு 36 என்பது நக்ஷத்திர ஹோரா கால அளவில் மணி 9-நிமிஷம் 49-செக்கன்டு 12·528 ஆகும்.

### ஐந்தாவது வாக்கியம்:—(சுதேச திருத்தம்)

இதன் மூலம் சுதேச திருத்தம் காணலாம். சுதேச திருத்தம் என்பதற்கு சு. தி. என்பன குறிப்பெழுத்துக்களாக வரும். சுதேச திருத்தம் என்பது ஒரு தலத்தின் சுதேச கடியார வேளைக்கும்—மற்றொரு தலத்தின் சுதேச கடியார வேளைக்குமுள்ள வித்தியாச மாகும்.

உதாரணம்:—சென்னைக்கும்—டில்லிக்குமுள்ள சுதேச கடியார வேளைகளின் வித்தியாசம் என்னும் சுதேச திருத்தம் வருமாறு:—

| | | பாகை | கலை | விகலை |
|---|---|---|---|---|
| சென்னை நகரின் ரேகாம்சம் | = | 80 — | 14 — | 47·10 |
| டில்லியின் ” | = | 77 — | 28 — | 00 |
| ரேகாம்ச வித்தியாசம் | = | 2 — | 46 — | 47·10 |

= பாகை 2 கலை 46 விகலை 47 ஆகும்.

| பா. க. வி. | | மணி | நிமி. | செக் |
|---|---|---|---|---|
| 2—00—00க்கு சு. தி. | = | 0 — | 08 — | 00 |
| 0—46—00க்கு ” | = | 0 — | 03 — | 04 |
| 0—00—47க்கு ” | = | 0 — | 00 — | 03·133 |
| கூட்ட 2—46—47க்கு சு.தி. | = | 0 — | 11 — | 07·133 |
| | = | 0 — | 11 — | 07 ஆகும். |

எனவே, சுதேச திருத்தம் 0 மணி 11-நிமிஷம் 07 செக்கன்டு ஆகிறது.

### ஆருவது வாக்கியம்:—(ஸ்டான்டர்ட் மணி வித்தியாசம்)

இதில் சில முக்கியமான தேசங்களிலும், நகர்களிலும் உபயோகப்படுத்தப் பெற்றுவந்த—அல்லது உபயோகப்படுத்தப் பெற்று வருகின்ற ஸ்டாண்டர்ட் மணிக்கும் (திட்டப்படுத்தப் பெற்றது)-கிரீன்விச் சுதேச மணிக்கும் உள்ள வித்தியாசத்தையும், அந்த வித்தியாசம் எந்த ரேகாம்சத்திற்குச் சுதேச மணி

என்பதையும் கொடுத்திருக்கின்றது. இந்த வித்தியாசம் ஸ்டாண்டர்ட் மணி வித்தியாசம் எனப் பெறும். ஸ்டாண்டர்ட் மணியைச் சில சௌகர்யங்களுக்காக வேண்டி அடிக்கடி மாற்றக்கூடும். ஆதலால், கணிதஞ் செய்பவர்கள் ஒவ்வொரு தேசத்திற்கும்—அல்லது மாகாணத்திற்கு முரிய ஸ்டாண்டர்ட் மணி வித்தியாசங்களை அவ்வப்பொழுது விசாரணை மூலம் அறிந்துகொள்ள வேண்டுவது அவசியமாகும்.

உதாரணமாக, பெடரேட்டட் மலேயா ஸ்டேட்ஸ்களில் ஸ்டாண்டர்ட் மணி வித்தியாசத்தை மணி 7-நிமிஷம் 0 செக்கன்டு 0 லிருந்து மணி 7-நிமிஷம் 20 செக்கன்டு 0 ஆக மாற்றப்பட்டு, 1936-ம் வருஷத்திலிருந்து அமுலிலும் இருந்தது. பின்பு, 1942-ல் மாறுதலடைந்திருப்பதாக அறிகிறோம். ஆனால், அதைப்பற்றி திட்டமான விவரம் எதுவும் இது வரை கிடைக்கவில்லை. கல்கத்தாவில் சென்ற ஆண்டின் இறுதியில் அதுவரை அமுலிலிருந்து வந்ததி லிருந்து 36-நிமிஷங்கள் கூட்டி யுள்ளனர். கிழக்கு ஜாவா-ஸுரபாயா முதலிய இடங்களிலுள்ள ஸ்டாண்டர்ட் மணியை 20-3-42 லிருந்து டோக்கியோ மணிப்படி ஒன்றரைமணி அளவு கூட்டி யிருக்கின்றனர்.

எழுபது - எண்பது வயதுக்குட் பட்டவர்களுடைய ஜாதகங்களைக் கணிக்க நேருகையில், அந்தக்காலத்திற்குள் ஸ்டாண்டர்ட் மணி வித்தியாசம் எப்படி இருந்த தென அறிந்து கொள்வது அவசியமே யல்லவா? கணிதம் செய்கிறவர்கள் அனைவரும் தங்கள் தங்களுக்கு அவசியமான தேசங்களுக்கு அவ்வப்பொழுதைய ஸ்டாண்டர்ட் மணி வித்தியாசங்களைக் காட்டும் ஆறுவது வாக்கியம்போன்ற பட்டி ஒன்று (Table) தயாரித்து வைத்துக்கொள்வது அனுகூலமாக விருக்கும். உதாரணமாக, ஆறுவது வாக்கியத்தில் மூன்றுவது பத்தியிலுள்ள பாகை 82 கலை 30 விகலை 00 என்பதற்கு ஐந்தாவது வாக்கியத்திலிருந்து கணிக்க மணி 5-நிமிஷம் 30-செக்கன்டு 00-வரும்.

ஏழாவது வாக்கியம்:—(அயனும்சம்)

இதனால் குறித்த—அதாவது நமக்கு வேண்டிய தேதிக்கு அயனும்சம் கணித்துக்கொள்ளலாம். இந்த வாக்கியத்தின்

தலைப்பில் அயனும்சம் = 22° —40'—39" என்று போட்டிருப்பதைக் கவனிக்கவும். இது ஒரு நிலையான அயனும்ச மாகும். இதிலிருந்து குறைகின்ற அல்லது கூடுகின்ற தொகை எவ்வளவோ அதனை அந்தந்த ஆண்டுகளுக்கு எதிரே தந்திருக்கின்றது. இந்தப் பகுதி ஒவ்வொரு ஆண்டிலும் ஏப்ரல் மாதம் 13-ம் தேதியில் அயனும்ச விந்தியாசம் நேருவதைக் கூறும். இந்த வாக்கியத்தின் முதற்பத்தியில் காணும் எண்கள் அனைத்தும் கிறிஸ்துவிற்குப் பின்னுள்ள ஆண்டுகளாகும். அந்தந்த ஆண்டுகளுக்கு நேராக—இரண்டாவது பத்தியில் கொடுத்துள்ள தொகைகள் தாம் அந்தந்த ஆண்டுகளில் நிலையான அயனும்சத்தி னின்றும் குறைகிற அல்லது கூடுகிற தொகை எவ்வளவு என்பதைக் காட்டும்.

ஆண்டுகளில் 1925-ம் வருஷத்திற்கு நேரே இரண்டாவது பத்தியில் அயனும்சம். எ. என்பது பாகை 0 கலை 0 விகலை 00-என்று போட்டிருக்கின்றது. இந்த ஆண்டில் நிலையான அயனும்சத்தினின்றும் ஏற்றத் தாழ்வு ஏதுமில்லை என்பதை அது தெரிவிக்கின்றது. எனவே, அந்த ஆண்டில் நிலையான அயனும்சம் = 22° —40'—39" தான் என்று அறியவும். 1925-ம் வருஷத்திற்கு முன்னுள்ள ஆண்டுகளில் இந்த நிலையான அயனும்சத்தினின்றும் குறைவு எவ்வளவு என்பதை அந்தந்த ஆண்டுகளுக்கு எதிரே இரண்டாவது பத்தியில் தந்திருக்கிறது. அந்தத் தொகை நிலையான அயனும்சத் தொகையினின்றும் கழித்துவிட அந்தந்த ஆண்டுகளுக்குரிய அயனும்சம் வரும். 1925-ம் வருஷத்திற்குப் பின்னுள்ள ஆண்டுகளுக்கு எதிரே இரண்டாவது பத்தியில் காண்பன நிலையான அயனும்சத்தினின்றும் கூடுவது எவ்வளவு என்பதைக் குறிக்கும். அந்தத் தொகையை நிலையான அயனும்சத்துடன் கூட்ட அந்தந்த ஆண்டுகளுக்குரிய அயனும்சம் தெரியும். இதெல்லாம் ஒவ்வொரு ஆண்டிலும் ஏப்ரல் மாதம் 13-ந் தேதிக்குரிய தென்பதை நினைவிற் கொள்ளவும். இவ்வகையிற் சில உதாரண விளக்கங்கள் வருமாறு:—

உதாரண விளக்கம் 1:—13-4-1840 - க்குரிய அயனும்சம் காணலாம். தலைப்பிற் கொடுத்துள்ள நிலையான தொகை 22° — 40' — 39". இதி லிருந்து 1840-ம் ஆண்டிற்கு

நேராக—இரண்டாவது பத்தியில் காணும் 1° — 11' — 12" ஐக் கழிக்க 21° — 29'—27" தான் 13—4—1840-க்குரிய அயனும்ச மாகும்.

உதாரண விளக்கம் 2:—13-4-1940-க் குரிய அயனும்சம் என்ன வென்று அறியலாம். தலைப்பிற் தந்துள்ள நிலையான தொகை 22° — 40' —39". 1940-ம் ஆண்டிற்கு நேராக இரண்டாவது பத்தியில் காணும் 0° — 12' — 35" ஐக் கூட்ட 22° — 53' — 14" தான் 13—4—1940 க்குரிய அயனும்ச மாகும்.

8-வது வாக்கியம்:—(சொச்ச தினங்களுக்கு அயனும்சம் காண)

இதன் மூலம் நமக்கு வேண்டிய தினத்திற்கு அயனும்சம் தெரியலாம். ஏழாவது வாக்கியத்தின் மூலம் நமக்கு வேண்டிய ஆண்டில் ஏப்ரல் மாதம் 13-ந் தேதிக் குரிய அயனும்சத்தைத் தெரிந்து கொண்ட பின், அந்த ஆண்டு ஏப்ரல் மாதம் 13-ந் தேதிக்கு மேல் எந்த தேதிக்கு வேண்டுமோ அதுவரையும் செல்லான தினங்களை முதலில் கணக்கிடவும். அந்த சொச்ச தினங்களுக்கு எட்டாவது வாக்கியத்தில் இரண்டாவது பத்தியில் தந்திருக்கும் எண்ணை (வேண்டிய ஆண்டில் ஏப்ரல் மாதம் 13-ந் தேதிக் குரிய அயனும்சத் தொகையுடன்) கூட்டவும். இவ்விதம் செய்தால், நமக்கு வேண்டிய தேதிக் குரிய அயனும்சம் துல்லிபமாகக் கிடைக்கும்.

உதாரண விளக்கம்:—17—8—1940-க்குரிய அயனும்சம் இங்கு காணுவோம். 13—4—1940-க்கு அயனும்சம் 22° — 53' — 14" என்று ஏழாவது வாக்கியத்தின் உதாரண விளக்கம் 2-ன் படி தெரிந்து கொண்டிருக்கிறோம். 13—4—1940 லிருந்து நாம் காணவேண்டிய தேதி 17—8—1940 வரையும் செல்லான சொச்ச தினங்கள் 125-ஆகும். இந்த தினங்கள் 125-க்கு எட்டாவது வாக்கியத்தின் மூலம் அடியிற் கண்ட விளக்கத்தின்படி 17·1 விகலை ஆகும்.

| தினம்—பி |
| --- |
| 100-க்கு = 13·7" |
| 20-க்கு = 2·7" |
| 5-க்கு = 0·7" |
| 125-க்கு = 17·1" |

இந்த 17·1 விகலையை 13·4·1940 க்கு வந்த அயனும்சமாகிய 22° — 53' — 14" உடன் கூட்ட 22° — 53' — 31'·1" வரும். இதுவே 17—8—1940-க் குரிய அயனும்ச மாகும்.

இனி, ஏழாவது-எட்டாவது வாக்கியங்கள் இரண்டையும் ஒரே தடவையில் உபயோகப் படுத்தி 17-8-1940க்குரிய அயனும்சத்தைக் காணுவது வருமாறு :—

நிலையான அயனும்சம் = 22° — 40'—39" (7-ம் வாக்கியம்) 1.
1940-க் குரிய „ = 0° — 12'—35" ( „ „ ) 2.

13-4-1940-க்கு „ = 22° — 53'—14 " (1ம் 2ம் கூட்ட) 3.
தினம் 100-க்கு „ = 0° — 00'—13·7" (8ம் வாக்கியம்) 4.
„ 20-க்கு „ = 0° — 00'— 2·7" ( „ „ ) 5.
" 5-க்கு „ = 0° — 00'— 0·7" ( " „ ) 6.

17—8—1940-க்கு „ = 22° — 53'—31·1" (3·4·5·6 இந்த வரிகளைக் கூட்ட) அல்லது பாகை 22-கலை 54-ஆகும்.

எனவே, 17-8-1940 க்கு அயனும்சம் 22° — 54", ஆகும்.

**ஒன்பதாவது வாக்கியம்:—(உதய—தசம பாவங்களின் ஸ்புடம்)**

ஒருவர் பிறந்த இடத்திற்கும்—நேரத்திற்கும் நக்ஷத்திர ஹோராதி மணி-நிமிஷம்-செக்கன்டு தெரிந்தால், அந்த இடத்திற்கு—அந்த காலத்திற்கு உதய லக்ன ஸ்புடமும்—தசம மத்ய லக்ன ஸ்புடமும் கணித்துக் கொள்ளக் கூடும்.

இந்த ஒன்பதாவது வாக்கியம் அக்ஷாம்சம் பாகை 0 முதல் அக்ஷாம்சம் பாகை 36-வரையும் ஒவ்வொரு முழு பாகைக்கும் தரப் பெற்றிருக்கிறது. இதில் முதற் பத்தியில் நக்ஷத்திர ஹோரை ஒவ்வொரு பனிரெண்டு நிமிஷத்திற்கு ஒரு தடவை தந்திருக்கிறது. இந்த நக்ஷத்திர ஹோரைக் குரிய உதய லக்ன—தசம மத்ய லக்ன ஸ்புட பாகை-கலைகள் முறையே இரண்டாவது—மூன்ருவது பத்திகளில் கொடுக்கப் பட்டுள்ளன. கணிப்பதற்கு வேண்டிய நக்ஷத்திர ஹோரா மணி—நிமிஷம் இந்த வாக்கியத்தின் முதற் பத்தியில் காணப் பெருவிடின், அது இதிற் காணப் பெறும் எந்த இரண்டு நக்ஷத்திர ஹோராதி மணி நிமிஷங்களுக்கு இடையே உள்ளதெனக் கண்டு, அந்த இரண்டு நக்ஷத்திர ஹோராதி மணி நிமிஷங்களுக்கு நேராக இரண்டாவது—மூன்ருவது பத்திகளிற் காணும் தொகைகளை எடுத்துக்கொண்டு வேண்டிய நக்ஷத்திர ஹோராதி மணி நிமிஷத்திற்குத் திரை ராசிக கணித வழி

முறையே உதய–தசம லக்னங்களை அறியவும். இதேபோல இரண்டு அக்ஷாம்ச முழு பாகைகளுக்கு இடையிலுள்ள எந்த அக்ஷாம்ச பாகை கலைகளுக்கு உதய – லக்னம் – கணிக்க வேண்டுமோ அதற்கு முன்னும்—பின்னுமுள்ள இரண்டு அக்ஷாம்ச முழு பாகைகளுக்கு முரிய இரண்டாவது பத்தியி லுள்ள தொகைகளி லிருந்து திரை ராசிக கணித மூலம் தெரிந்து கொள்ளலாம். தசம லக்ன ஸ்புடம் எல்லா அக்ஷாம் சங்களுக்கும் ஒரே விதமாக வித்தியாச மின்றி யிருத்தலின், அக்ஷாம்ச பாகை—கலைக்கு முன் கூறியதுபோல திரை ராசிக கணித பூர்வம் அக்ஷாம்சத்திற்காகக் கணிக்க வேண்டிய தில்லை. ஆயினும், வேண்டிய நக்ஷத்திர ஹோராதி மணி நிமி ஷத்திற்கு மட்டும் தசம லக்னம் திரை ராசிக கணித பூர்வம் முன் குறிப்பிட்டதுபோல காண வேண்டுவதே யாம்.

குறிப்பு :—உதய லக்ன மட்டுமே நக்ஷத்திர ஹோரை—அக்ஷாம் சம் இவை இரண்டையும் அனுசரித்து மாறிக்கொண் டிருத்தலின், உதய லக்ன கணிதஞ் செய்கையில் முதற்கண் நக்ஷத்திர ஹோரா வித்தியாசத்திற்கும், அதன்பின் அக்ஷாம்ச வித்தியாசத்திற்கும் திரை ராசிக கணித பூர்வம் காண வேண்டும். தசம லக்னம் நக்ஷத் திர ஹோரையை மட்டுமே அனுசரித்து மாறிக் கொண்டிருத்த லின், அக்ஷாம்ச வித்தியாசத்தைப் பற்றிக் கவனிக்காமல் நக்ஷத் திர ஹோரா வித்தியாசத்திற்கு மட்டும் திரை ராசிக பூர்வம் கணித்துக் கொள்க.

**உதாரண விளக்கம் 1 :**—சென்னையில் 7-5-1930-ல் மாலை இந்தியன் ஸ்டாண்டர்ட் மணி 4-நிமிஷம் 3-செக்கன்டு 30-க்கு நக்ஷத்திர ஹோரா மணி-6 நிமிஷம்-52 செக் கன்டு-40; இதற்கு உதய - தசம லக்ன ஸ்புடம் காணுவோம்.

சென்னையின் அக்ஷாம்சம் 13° — 04' வடக்கு; ரேகாம் சம் 80° — 14' — 47". 10-கிழக்கு.

முதலில் உதய லக்ன ஸ்புடம் கணிப்போம் ;—இதற் குரிய இடம் சென்னை ; அதன் அக்ஷாம்சம் 13°- 04' ; இது 13° - க்கும் 14° - க்கும் இடையே இருப்பது. எனவே, 13° - 14° ; இவற்றிற்குரிய தொகைகளை ஒன்பதாவது வாக்கியத் தில் இந்த விளக்க முழுவதினும் கவனிக்க வேண்டும். நக்ஷத்திர ஹோரா மணி-6 நிமிஷம்-52 செக்கன்டு 40 என்பது நக்ஷத்

திர ஹோரா மணி 6 நிமிஷம் 48 க்கும் நக்ஷத்திர ஹோரா மணி-7 நிமிஷம் 00 க்கும் இடையில் இருக்கின்றது. எனவே, இந்த இரண்டு நக்ஷத்திர ஹோரா மணி நிமிஷங்களுக்கும் உரிய தொகைகளை ஒன்பதாவது வாக்கியத்தில் இந்த விளக்கம் முழுவதும் கவனிக்க வேண்டும்.

அக்ஷாம்சம் 13-பாகை வடக்கு என்பதில், முதற் பத்தியில் நக்ஷத்திர ஹோரா மணி-6 நிமிஷம்-48 க்கு நேராக இரண்டாவது பத்தியில் உதய லக்னம் பாகை-191 கலை-53 என்று காணுகிறோம்; நக்ஷத்திர ஹோரா மணி-7 நிமிஷம்-00 க்கு நேராக இரண்டாவது பத்தியில் உதய லக்னம் பாகை-194 கலை-50 என்று போட்டிருக்கிறது, இவை இரண்டிற்கு முள்ள வித்தியாசத்தைப் பின் வருமாறு அறியலாம்.

| | நக்ஷத்திர ஹோரை | | உதய லக்ன ஸ்புடம் | |
|---|---|---|---|---|
| | மணி. நிமி. செக். | | பாகை. கலை. விகலை. | |
| | 7—00—00 | க்கு = | 194—50—00 | ஆகும் (1) |
| | 6—48—00 | „ = | 191—53—00 | „ (2) |
| வித்தியாசம் (1-லிருந்து 2-ஐக் கழிக்க) | 0—12—00 | „ = | 2—57—00 | „ (3) |

நிமிஷம் பனிரெண்டையும் செக்கன்டாக ஆக்க 720-செக்கன்டுகள் வரும். பாகை-2 கலை-57 என்பதை விகலையாக்க 10, 620-விகலைகள் வரும். நமக்கு வேண்டிய நக்ஷத்திர ஹோரா மணி-6 நிமிஷம்-52 செக்கன்டு 40; எடுத்துக் கொண்ட நக்ஷத்திர ஹோரா மணி-6 நிமிஷம்-48; இவை இரண்டிற்கு முள்ள வித்தியாசம் மணி-0 நிமிஷம்-04 செக்கன்டு-40. இதை செக்கன்டுகளாக்க 280-செக்கன்டுகள் வரும். எனவே, நக்ஷத்திர ஹோரா வித்தியாசம் 720-செக்கன்டுகளுக்கு உதய லக்ன ஸ்புட வித்தியாசம் 10, 620 - விகலைக ளாயின், நக்ஷத்திர ஹோரா வித்தியாசம் 280-செக்கன்டுகளுக்கு உதய லக்ன ஸ்புடம் என்ன வென்று இதுவேளை திரை ராசிக பூர்வம் காணவேண்டும். அதாவது 10, 620-விகலைகளை 280-ஆல் பெருக்கி 720-ஆல் வகுக்க வருகின்ற விகலைகள் தாம் 280-செக்கன்டுகளுக்குரிய உதய லக்ன ஸ்புட வித்தியாச மாகும்.

இவ் வழி பாகை-1 கலை-8 விகலை-50 வரும். இதனை நக்ஷத்திர ஹோரா மணி-6 நிமிஷம் 48-க்குரிய உதய லக்ன ஸ்புட மாகிய பாகை-191 கலை-53 உடன் கூட்ட பாகை-193 கலை-01 விகலை-50—அதாவது பாகை-193 கலை-02 ஆகும். இதுவே, அக்ஷாம்ச பாகை 13-க்குள்ள இடத்திற்கு நக்ஷத்திர ஹோரா மணி-6 நிமிஷம்-52 செக்கன்டு-40க் குரிய உதய லக்ன ஸ்புடமாம்.

ஒரு இடத்தின் அக்ஷாம்ச பாகைகளுக் கேற்ப வரும் நக்ஷத்திர ஹோராதி மணி—நிமிஷங்களுக்குரிய உதய லக்ன ஸ்புடம் கணித்துக் கொள்ள வேண்டும். இது அடிக்கடி எல்லோருக்கும் நேருமாகையால், அதற்கு உபயோகமாக விருக்கும்படி மேலே காட்டிய லக்ன ஸ்புடத்திற்குரிய கணித வழியின் சுருக்கம் வருமாறு :—

ரப் ஒர்க்—**Rough Work.**

```
      10620            | 60) 4130 (68 கலை
        280            |     360
    -------            |     ---
     849600            |      530
      21240            |      480
   --------            |      ---
720) 2973600 (4130     |       50 விகலை
     2880      விகலை   | 60) 68 கலை (1 பாகை
     ----              |     60
      936              |     --
      720              |      8 கலை
      ---              | (4) அதாவது பா 1 கலை 8 வி 50
      2160             | (3)      பா 191 கலை 53 வி 00
      2160             |  ---------------------------
      ----             | (4)ம் (2)ம் கூட்ட பாகை 193
                       |   கலை 01 விகலை 50 - அல்லது
                       |   பாகை 193 கலை 02 ஆகும்.
```

(உ

ஒன்பதாவது வா

,,

வித்தியா

(1 லிருந்து 2 ஐக்

கோரியமன

கோரிய வி

(4 லிருந்து 2 ஐ

கோரிய வி

திரை ரா

2ம் 6ம் கூட்ட

= 193 . (7) ஆகும்.

(b) இதன் மேல் இவ்விதமே இடம் பாகை 14 கலை 0 வடக்குக்குக் காணவேண்டும்.

| | நக்ஷத்திர ஹோரை | | உதய லக்ன ஸ்புடம் | |
|---|---|---|---|---|
| | மணி. நிமி. செக். | | பா. கலை. வி. | |
| ஒன்பதாவது வாக்கியம் | 7—00—00 | -க்கு | 194—43—00 | (1) |
| ,, ,, | 6—48—00 | -க்கு | 191—48—00 | (2) |
| வித்தியாசம் 1 லிருந்து 2 ஐக் கழிக்க | 0—12—00 | -க்கு | 2—55—00 | (3) |
| கோரிய மணி | 6—52—40 | | | (4) |
| கோரிய வித்தியாசம் 4லிருந்து 2ஐக் கழிக்க | 0—04—40 | | | (5) |
| கோரிய வித்தியாசம் | 0—04—40 | க்கு | 1—08—03 | (6) |
| திரை ராசிக பூர்வம் | 1 | | | |
| 2ம் 6ம் கூட்ட | 6—52—40 | ,, | 192—56—03 ஆகும். | |
| | அல்லது பாகை 192 கலை 56 ஆகும். | | | (7) |

இதுவே அக்ஷாம்சம் பாகை 14-க்குரிய இடத்திற்கு நக்ஷத்திர ஹோரை மணி 6-நிமிஷம் 52 செக்கன்டு 40-க்கு உதய லக்ன ஸ்புடமாம்.

(C) இனி, இடம் பாகை 13 கலை 0 க்கு உதய லக்ன ஸ்புடம் பாகை 193 கலை 02ம் இடம் பாகை 14-கலை 0-க்கு உதய லக்ன ஸ்புடம் பாகை 192-கலை 56-ம் ஆயின், இடம் பாகை 13-கலை 04-க்கு உதய லக்ன ஸ்புடம் திரை ராசிக பூர்வம் காணவேண்டும்.

ரப் ஓர்க்—(a) Rough work

பா. கலை. வி.
2—57—00
60
—
120-கலை
57-கலை
———
177-கலை
60
———
10620-விகலை
———
ம. நி. செ.
0—12—0
60
———
720-செக்
———
0—04—40
60
———
240
40
280-செக்

ரப் ஓர்க்—(b) Rough work

பா. கலை. வி.
2—55—00
60
—
120-கலை
55-கலை
———
175-கலை
60
———
10500-விகலை
280
———
840000
21000
———
2940000

720)2940000 (4083 விகலை
2880
———
6000
5760
———
2400
2160
———
240

60) 4083 விகலை (68 கலை
360
———
483
480
———
3 விகலை
60) 68 கலை (1 பா
60
———
8 கலை
பாகை 1 கலை 8 விகலை 3

(C) இடம்—வடக்கு

| | பா. | க. | வி | பாகை | கலை | |
|---|---|---|---|---|---|---|
| (b) வழி கணித்துவந்தது | 14—00—00க்கு | | | 192- | 56 | (1) |
| (a) ,, ,, | 13—00—00க்கு | | | 193- | 02 | (2) |
| வித்தியாசம் (1-லிருந்து 2-ஐக் கழிக்க) | 1—00—00க்கு | | | 0 | 06 | (3) |
| கோரிய இடம் | 13—04—00க்கு | | | | | (4) |
| கோரிய வித்தியாசம் (4லிருந்து 2ஐக் கழிக்க | 0—04—00 | | | | | (5) |
| கோரிய வித்தியாசம் | 0—04—00க்குத் திரை ராசிக பூர்வம் 0—00—24 | | | | | (6) |
| 2-ம் 6-ம் சேர்க்க | 13—04—00க்கு 193—01—27 அல்லது பாகை 193—கலை 02 | | | | | (7) |

எனவே, பாகை 193 கலை 02 தான் இடம் பாகை 13 கலை 04 வடக்குக்கு—நக்ஷத்திர ஹோராமணி 6-நிமிஷம் 52 செக்கன்டு 40-க்கு உதய லக்ன ஸ்புட மாகும். அதாவது சென்னையில் 7-5-1930 மாலை இந்தியா ஸ்டாண்டர்ட் மணி 4 நிமிஷம் 3-செக்கன்டு 30 க்கு உதய லக்ன ஸ்புட மாகும். இந்த விதமாகக் கோரிய இடத்திற்கு—கோரிய வேளைக்கு உதய லக்ன ஸ்புடம் காணவேண்டும். அதற்கு நக்ஷத்திர ஹோரா மணி நிமிஷம் தெரியின், இந்த ஒன்பதாவது வாக்கியம் உதயலக்ன ஸ்புடத்திற்கு உதவியாக விருக்கும்.

(C) ரப் ஒர்க்—**Rough Work**

ஒரு பாகை அதாவது 60 கலைக்கு வித்தியாசம் பா. 0 கலை 06 அதாவது 360 விகலை ஆனால், 4 கலைக்கு எவ்வளவு என்று காணுவதற்கு 360 ஐ 4 ஆல் பெருக்கி 60 ஆல் வகுக்கவும்.

(1) பாகை—கலை
0— 06
60
———
360 விகலை

360
4
———
60) 1440 (24
120
———
240
240
———

(d) இனி தசம லக்னம் காணுவோம்:—

| | நக்ஷத்திர ஹோரை மணி.நிமி.செக். | | உதய லக்ன ஸ்புடம் பா. கலை. வி. | |
|---|---|---|---|---|
| ஒன்பதாவது வாக்கியம் 13-வது பாகை இடம் | 7—00—00 க்கு | | 103—49—00 | (1) |
| ,, ,, | 6—48—00 க்கு | | 101—02—00 | (2) |
| வித்தியாசம் | 0—12—00 க்கு | | 2—47—00 | (3) |
| கோரிய மணி | 6—52—40 | | | (4) |
| கோரிய வித்தியாசம் | 0—04—40 | | | (5) |
| கோரிய வித்தியாசம் | 0—04—40 க்கு திரை ராசிக பூர்வம் | | 1—04—57 | (6) |
| 2-ம் 6-ம் கூட்ட | 6—52—40 க்கு | | 102—06—57 ஆகும். | |

அதாவது பாகை 102 கலை 07 தான் அக்ஷாம்சம் பாகை 13 கலை 04 வடக்கு என்னும் இடம்—சென்னையில் நக்ஷத்திர ஹோரை மணி 6-நிமிஷம் 52 செக்கன்டு 40 என்னும் காலமாகிய மாலை இந்தியா ஸ்டாண்டர்ட் மணி 4 நிமிஷம் 3 செக்கன்டு 30 க்கு தசம லக்ன ஸ்புட மாகும்.

ரப் ஒர்க்—Rough Work

ம. நி. செ
0—12—0
60
———
720 செக்

ம. நி. செ
0—04—40
60
———
240 செக்
40 செக்
———
280 செக்

பா. க. வி.
2—47—00
60
———
120 க
47 க
———
167 க
60
———
10020 வி
———
10020 வி
280
———
801600
20040
———
2805600 வி

720) 2805600 வி (3896
2160
———
6456
5760
———
6960
6480
———
4800
4320
———
480 இது அரைக்கு மேற்பட்டதென்பதால், 3896 என்பது 3897 வி என்று வரும்.

| | |
|---|---|
| 60) 3897 விகலை (64 கலை<br>360<br>——<br>297<br>240<br>——<br>57 | 60) 64 க (1 பா<br>60<br>——<br>4 கலை எனவே, 3897 விகலை என்பது பாகை 1 கலை 4-விகலை 57 ஆம். |

பத்தாவது வாக்கியம்:–(நக்ஷத்திர ஹோராதி மணி–நிமிஷம் செக்கன்டு)

இதில் கி. பி. 1865-ம் ஆண்டு முதல் 1942-ம் வருஷம் வரை கிரீன்விச் (Greenwich) நகருக்குப் பகல் 12-மணிக்கு அல்லது இரவு 12-மணிக்கு நக்ஷத்திர ஹோராதி மணி—நிமிஷம்—செக்கன்டு பத்து தினங்களுக்கு ஒரு முறை விதம் தந்திருக்கிறது. நண்பகல் (N) என்பது பகல் 12-மணிக்கு நக்ஷத்திர ஹோராதி மணி கொடுக்கப்பட்டிருக்கின்றதென்பதைத் தெரிவிக்கும். இங்கு கொடுத்துள்ள நடுநிசி (M) என்பது இரவு 12-மணியாகிய காலத்தைக் குறிக்கும். பத்து பத்து தினங்களுக்கு அங்கங்கு நக்ஷத்திர ஹோராதி மணி தந்திருப்பதால், ஒருவருக்கு வேண்டிய தேதிக்கு நக்ஷத்திர ஹோராதி மணி–நிமிஷம்–செக்கன்டு அறிய, திரை ராசிக பூர்வம் கணித்துக் கொள்ளவும். சாதாரண வருஷங்களுக்கு நக்ஷத்திர ஹோராதி மணி இந்த வாக்கியத்தின் முற்பகுதியில் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது; பிற்பகுதியில் லீப் வருஷங்களுக்கு வரிசையாக நக்ஷத்திர ஹோராதி மணி தந்திருப்பதைக் காணவும். சாதாரண வருஷத்தில் டிசம்பர் மாதம் 27-ந் தேதி வரைக்கும் நக்ஷத்திர ஹோராதி மணி காணலாம். அதன்மேல் டிசம்பர்மீ 28உ முதல் 31உ வரையும் எந்தத் தேதிக்காவது வேண்டுமாயின், அடுத்த வருஷம் ஜனவரிமீ 1உக்குக் கொடுத்திருக்கும் நக்ஷத்திர ஹோராதி மணியையும் டிசம்பர் மாதம் 27-ந் தேதிக்குரிய நக்ஷத்திர ஹோராதி மணியையும் குறித்துக் கொண்டு திரை ராசிக பூர்வம் கணித்துக் கொள்ளவும்.

இதில் டிசம்பர்மீ 27உக்கும்–ஜனவரி 1உக்கும் இடையே பத்து தினங்கள் இல்லாமல் ஐந்து தினங்கள் தான் இருப்பது கவனிக்கவும்; அத்துடன், லீப் வருஷங்களில் டிசம்பர்மீ 26உ வரை தான் நக்ஷத்திர ஹோராதி மணி நிமிஷம் தந்திருப்பதால், டிசம்பர்மீ 26உ முதல் ஜனவரிமீ 1உ வரை

முன்போலவே பத்து தினங்களாக வின்றி ஆறு தினங்கள் தான் இருப்பதையும் நன்கு கவனத்தோடு குறிப்பிற் கொள்ளவும். ஒவ்வொரு தினத்திற்கும் நக்ஷத்திர ஹோராதி மணி தருவதென்றால், இந்த ஏடு இடந் தராதென்பதால், பத்து தினங்களுக்கு ஒரு தடவையாகத் தந்திருக்கிறது. 1865-ம் வருஷத்திற்கு முன் அல்லது 1942ம் வருஷத்திற்குப் பின்னே உள்ள வருஷங்களுக்கு வேண்டுவோர் நமக்கு எழுதியோ அல்லது நமது பஞ்சாங்கம் அல்லது எமது இதர ஜோதிஷ கணித நூற்கள் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம். ஒரு குறித்த தேதிக்கு நக்ஷத்திர ஹோரை காணும் வழியை இந்த வாக்கியத்தின் மூலம் விளக்குவோம்.

உதாரணம்:—கிரீன்விச் நகரில் 7–5–1930-ல் கிரீன்விச் சுதேச மணி பகல் 12-க்கு நக்ஷத்திர ஹோராதி மணியைக் காணலாம்:—

(பத்தாவது) வாக்கியத்தில் 1930-ம் வருஷத்திற்கு அருகே நண்பகல் என்று இருப்பதைக் கவனிக்கவும். இந்த நண்பகல் என்பது பத்து தினங்களுக்கு ஒரு தடவை தந்திருக்கும் நக்ஷத்திர ஹோரையானது நண்பகல் 12-மணிக்குத் தந்திருக்கின்றது என்பதைக் குறிக்கும். 7–5–1930 என்னும் தேதி 1–5–1930 க்கும் 11–5–1930 க்கும் நடுவில் இருத்தலின், இந்தத் தேதிகளை எடுத்துக் கொள்க.

| தேதி | | நக்ஷத்திர ஹோரை | | |
|---|---|---|---|---|
| | | ம. நி செக். | | |
| 11–5–1930 க்கு | = | 13–14–10 | (1) | |
| 1–5–1930 க்கு | = | 12–43–44 | (2) | |
| வித்தியாசம் பத்து தினங்களுக்கு | = | 0–39–26 | (3) | 1 லிருந்து 2 ஐக் கழிக்க. |
| வித்யாசம் ஒருதினத்திற்கு | | 0–03–56·6 | (4) | 3 ஐ 10 ஆல் வருக்க |
| ,, 6 ,, | = | 0–23–39 | (5) | 4 ஐ 6 ஆல் பெருக்க |
| 7–5–1930 க்கு | = | 2–58–23 | (6) | 2 ம் 5 ம் கூட்ட |

எனவே, 7–5–1930-ல் கிரீன்விச்சில் அதன் சுதேச மணி பகல் 12-மணிக்கு நக்ஷத்திர ஹோரை மணி-2 நிமிஷம்-58 செக்கன்டு 23-ஆகும். இது மிகவும் துல்லிபமான கணக்கின்படி மணி-2 நிமிஷம்-58 செக்கன்டு 23·6 என வரும்.

பதினொன்றாவது வாக்கியம்:—(அக்ஷாம்சமும்—ரேகாம்சமும்)

இதில் சில முக்கியமான இடங்களுக்கு அக்ஷாம்சமும்—ரேகாம்சமும் தந்திருப்பதைக் காணலாம். ஐந்தாவது வாக்கியம் அல்லது ஒன்பதாவது வாக்கியத்தை உபயோகப் படுத்துவதற்கு வேண்டிய ரேகாம்சத்தை அல்லது அக்ஷாம்சத்தை இதன்மூலம் அறியக்கூடும். நமக்கு வேண்டிய இடம் இதில் காணப் பெறு திருப்பின், இதிற் காணும் இடங்களில் எந்த இடத்திற்கு மிகவும் அருகானது என்று அறிந்து, அந்த இடத்தின் அக்ஷாம்ச-ரேகாம்சங்களையே உபயோகப் படுத்தலாம். அவ்விதம் மிகவும் அருகில் என்பது முப்பது அல்லது முப்பத்து ஐந்து மைல்களுக்குள் இடம் பெறுவதென்பதாம்.

அநுபந்தம் (1-வது):—இறுதியாகக் காணப்பெறும் அநுபந்தங்களில் முதலாக விருப்பதில் கிரீன்விச் நகரின் சுதேசமணிக்கும்—சில முக்கியமான இடங்களின் சுதேசமணி அல்லது ஸ்டாண்டர்ட் மணிக்கும் உள்ள வித்தியாசங்களைப் பற்றிய விவரம் தந்திருக்கிறது.

அநுபந்தம் (2-வது):—இதில் ஏழாவது வாக்கியத்தின்படி கி. பி. 1840-ம் வருஷம் முதல் கி. பி. 2000-ம் வருஷம் வரை அயனும்சம் கணித்துப் போட்டிருக்கிறது.

நக்ஷத்திர ஹோரா மணியைக் கணிக்கும் பொது வழி
(வடக்கு அக்ஷாம்சம்)

1. கிரீன்விச் நகருக்குக் கிழக்கே யுள்ள—அதாவது ரேகாம்சம் 0 பாகை கிழக்கு முதல் 180-பாகை கிழக்கு வரையுள்ள எல்லா இடங்களுக்கும் நக்ஷத்திர ஹோரா மணியைக் கணிக்கப் பொதுவான வழி வருமாறு:—

1-வது லக்கம்:—நக்ஷத்திர ஹோரையைக் கணிப்பதற்கு உரிய இடமாகிய பி. என்ற தலத்தின் ரேகாம்சத்தை (Longitude of the Required Place P) ரே. என்னும் எழுத்தாலும் கிழக்கு என்பதை கி. என்ற எழுத்தாலும் குறிப்பிடுவோம். எனவே, ரேகாம்சம் கிழக்கு என்பதற்கு ரே. க. என்பன குறிப்பெழுத்துக்க ளாகும்.

2-வது லக்கம் :—இந்த புத்தகத்தின் பத்தாவது வாக்கியத்திலோ அல்லது மேலை தேயத்துப் பஞ்சாங்கங்களிலோ

அல்லது நம் நாட்டுப் பஞ்சாங்கங்களிலோ கிரீன்விச் நகருக்கு அல்லது வேறே முக்கியமான நகருக்கு சுதேசமணி பகல் 12–மணிக்குக் கொடுக்கப்பட்ட நக்ஷத்திர ஹோராமணி நிமிஷம் செக்கன்டிற்கு ப. என்ற குறிப் பெழுத்தையும், இந்த முக்கிய நகருக்குச் சுதேசமணி இரவு 12–மணிக்குக் கொடுக்கப்பட்ட நக்ஷத்திர ஹோராமணி நிமிஷம் செக்கண்டிற்கு இ. என்னும் குறிப்பெழுத்தையும் உபயோகித்துக் கொள்வோம்.

குறிப்பு:—கிரீன்விச் நகருக்குக் கிழக்கிலுள்ள இடங்களுக்கு கிரீன்விச் நகருக்கு இதில் தந்திருக்கும் நக்ஷத்திர ஹோரையை உபயோகப்படுத்திக் கணிக்குமாறு அடிக்கடி நேரக்கூடுமாகையால் இந்த வழியை மாத்திரம் நன்கு அறிந்துகொள்வது போதுமானதாக விருக்கும்.

3–வது லக்கம்:—இரண்டாவது லக்கத்தில் கூறிய கிரீன் விச் நகருக்கும் அல்லது வேறே முக்கியமான நகருக்கும் பி. என்னும் இடத்திற்கும் இடையிலுள்ள ரேகாம்சம் கணித்து, இந்த ரேகாம்ச வித்தியாசத்திற்காகச் செய்யும் திருத்தமே ரேகாம்ச திருத்தம் ஆகும்; அதனை ரே. தி. என்னும் குறிப்பெழுத்துக்களால் குறிப்பிட்டு வருவோம்.

4–வது லக்கம்:—வேண்டிய (கோரிய) இடமாகிய பி. என்னும் இடத்தில் உபயோகத்திலுள்ள சுதேசமணிக்கும்—கிரீன் விச் சுதேசமணிக்கும் உள்ள வித்தியாசம் சுதேசமணி வித்தியாசம் ஆகும்; அதற்கு சு. வி. என்னும் குறிப்பெழுத்துக்களை உபயோகிப்போம்.

5–வது லக்கம்:—வேண்டிய (கோரிய) இடமாகிய பி. என்னும் இடத்தில் உபயோகத்திலுள்ள ஸ்டாண்டர்ட் மணிக்கும் கிரீன்விச் சுதேச மணிக்கும் உள்ள வித்தியாசம் ஸ்டாண்டர்ட் மணி வித்தியாசம் ஆகும்; இதற்கு ஸ். வி. என்னும் குறிப்பெழுத்துக்களைக் கொள்வோம்.

6–வது லக்கம்:—வேண்டிய (கோரிய) இடமாகிய பி. என்னும் இடத்தில் நக்ஷத்திர ஹோரை கணிக்கவேண்டிய காலத்திற்கு வேண்டிய (கோரிய) மணி ஆகும்; இதனை வே. ம. என்னும் எழுத்துக்களால் குறிப்பிட்டு வருவோம்.

7–வது லக்கம்:—கிரீன்விச் சுதேச மணிக்கு கி. ம. என்ற எழுத்துக்களை குறிப்பிடுவோம்.

8-வது லக்கம்:—கிரீன்விச் நகரின் ரேகாம்சத்திற்கும்—கோரிய இடமாகிய பி என்னும் இடத்தின் ரேகாம்சத்திற்கும் உள்ள வித்தியாசத்தை ரே. வி. என்போம். இந்த ரே. வி. என்னும் ரேகாம்ச வித்தியாசத்திற்காக ஐந்தாவது வாக்கியத்திலிருந்து கணித்து வரும் சுதேச திருத்தத்திற்கு. சு. தீ. என்று கூறுவோம்.

கோரிய இடமாகிய பி என்னும் இடத்தின் சுதேச மணிக்கு சு. ம. என்னும் எழுத்துக்களைக் குறிப்பிடலாம்.

9-வது லக்கம் :—வேண்டிய (கோரிய) இடமாகிய பி என்னும் இடத்தில் கடியார மணி பகல் 12-மணிக்கும் அல்லது கடியார மணி இரவு 12-மணிக்கும் வேண்டிய (கோரிய) மணி (ஆருவது லக்கத்திற் கூறிய) வே. ம. என்பதற்கும் இடையில் செல்லான கடியார காலத்திற்கு க. கா. என்போம். நான்காவது வாக்கியத்தில் இந்த க. கா. என்பதற்குக் கொடுத்துள்ள சமமான நக்ஷத்திர காலத்திற்கு ந. கா. என்போம். மேலே 2-வது லக்கத்திற் கூறிய கிரீன்விச் நகர்-அல்லது வேறே முக்கியமான நகருக் குரிய ப என்பதை உபயோகப் படுத்தும் பொழுது பி என்ற இடத்தில் கடியார மணி பகல் 12-மணிக்கும் வே. ம. என்பதற்கும் இடையிலுள்ள க. கா. என்பதை உபயோகப்படுத்தி வரவும். இ. என்பதை உபயோகப் படுத்தும் பொழுது பி. என்ற இடத்தில் கடியார மணி இரவு 12-மணிக்கும் வே. ம. என்பதற்கும் இடையிலுள்ள க. கா. என்பதை உபயோகப்படுத்தி வரவும்.

10-வது லக்கம் :—கிரீன்விச் சுதேச மணி பகல் 12-மணிக்கு நக்ஷத்திர ஹோரை தெரியும் பொழுது, வேண்டிய (கோரிய) இடமாகிய பி. என்ற இடத்தில் ஒரு கோரிய தினத்தில் சுதேச மணி பகல் 12-மணிக்கு நக்ஷத்திர ஹோராதி மணி கணிக்க:—

கோரிய தினத்தில் கிரீன்விச்சில் சுதேச மணி பகல் 12-மணிக்கு நக்ஷத்திர ஹோரை = ப (1) ஆகும்.

(லக்கம் 2 ஐப் பார்க்கவும்)

3-வது லக்கத்திற் சொல்லியபடி கிரீன்விச்சுக்கும் பி என்ற இடத்திற்கும் ரேகாம்ச திருத்தம் } = ரே. தி. (2)

பி. கிழக்கு ரேகாம்சம் உடையது; ஆகையால் ரே. தி. என்பது ருணக் குறி (—) உடையது.

எனவே, பி. என்னும் இடத்தில் சுதேச மணி பகல் 12-மணிக்கு நக்ஷத்திர ஹோரை = ப. —ரே. தி. (3) ஆகும்.

11-வது லக்ஷம்:—வேண்டிய (கோரிய) இடமாகிய பி. என்ற இடத்தில் கோரிய காலமாகிய வே. ம. என்பதற்கு பி. என்னு மிடத்தின் சுதேச மணியாகிய சு. ம. என்பதைக் காணுவோம்.

(அ) கோரிய மணி ஸ்டாண்டர்ட் மணியாயின்,

| | |
|---|---|
| கோரிய மணி | = வே. ம. (1) ஆகும். |
| 5-வது லக்கத்தில் கூறிய ஸ்டாண்டர்ட் மணி வித்தியாசம் | = ஸ். வி. (2) ,, |
| எனவே, வே. ம. வுக்குக் கிரீன்விச் சுதேச மணி | = வே. ம—ஸ். வி (3)" (1லிருந்து 2 ஐக் கழிக்க) |
| 8-வது லக்கத்தின்படி கணித்து வரும் சுதேச திருத்தம் | = சு. தி. (4) ஆகும். |
| 3-ம்—4-ம் கூட்ட வருகின்ற பி. என்ற இடத்தின் சு. ம. | = வே. ம—ஸ். வி + சு. தி. (5) |

இந்த வே. ம.—ஸ். வி. + சு. தி. என்பதுதான் பி. என்னும் இடத்தில் வே. ம. என்ற கோரிய காலத்திற்கு சு. ம. என்னும் சுதேச மணியாகும்.

(ஆ) கோரிய மணி சுதேச மணியாயின்:—

| | |
|---|---|
| கோரிய மணி | = வே. ம. (1) ஆகும் |
| 5-வது லக்கத்தில் சொல்லிய சுதேச —மணி வித்தியாசம் | = சு. வி. (2) ,, |
| எனவே, வே. ம. வுக்கு கிரீன்விச் சுதேச மணி | வே. ம.—சு. வி. (3) ,, (1 லிருந்து 2 ஐக் கழிக்க) |
| 8-வது லக்கத்தின்படி கணித்து வரும் சுதேச திருத்தம் | = சு·தி. (4) ஆகும் |
| 3-ம் 4-ம் கூட்ட வருகின்ற பி. என்னு மிடத்தின் சு·ம·+சு·தி· | = வே·ம—சு·வி· + சு·தி· (5) ,, |

